உ
॥ श्रीगौर्यम्बायै नमः॥
॥ ஶ்ரீகௌ³ர்யம்பா³யை நம:॥



# ॥ गौरीदशकम् ॥

# கௌ³ரீ த³ஶகம்

என்னும்

# கௌ³ரீப் பத்து

**लीलालब्ध स्थापितलुप्ताखिललोकां**
**लोकातीतैर्योगिभिरन्तश्चिरमृग्याम् ।**
**बालादित्य श्रेणिसमानद्युतिपुञ्जां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ १ ॥**

**லீலாலப்³த⁴ ஸ்தா²பிதலுப்தாகி²லலோகாம்**
**லோகாதீதைர்யோகி³பி⁴ரந்தஶ்சிரம்ருக்³யாம் ।**
**பா³லாதி³த்ய ஶ்ரேணிஸமானத்³யுதிபுஞ்ஜாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 1 ॥**

**(இதன் பொருள்)** உலகத்தைப் படைத்தல் காத்தல் அழித்தலை விளையாட்டாகச் செய்பவளும், உலகப்பற்று நீங்கிய யோகியர் மனத்தில் நீளநினைந்து தேடப்படுபவளும், அநேக சூரியர்கள் ஒருங்கு உதித்தாற் போன்ற சோதிப் பிழம்பானவளும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளுமாகிய கௌரி அம்மையை யான் ஏத்துக்கின்றேன். (என்றவாறு)

பிரபஞ்ச சிருட்டி முதலிய கிருத்தியம் ஈசுவர சக்தியின் லீலாமாத்திரையாகவே நிகழ்வதென்பதை,

"........*இவ்வானுங் குவலயமும் எல்லோமும்*
*காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி,"* (திருவாசகம்)

எனவும்,

*“உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்*
*நிலைபெ றுத்தலு நீக்கலும் நீக்கலா*
*அலகி லாவிளை யாட்டுடை யாரவர்*
*தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே* (கம்ப ராமாயணம்)

எனவும் வருவன வற்றாலுமறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

1. *உலகனைத்து முளவாக்கி நிலைபெறுத்தி யொடுக்கிவிளை யாடல் செய்வாள்*
*உலகிறந்த போகியர்த முள்ளமதி லோவாது நேட நின்றாள்,*
*அலகிலிள ஞாயிறென்று யுதித்ததென அவிர்சோதிப் பிழம்பதாவாள்*
*இலகுவிழி கமலமலர் மானும்மை கௌரியையான் இறைஞ்சுகேனே.*

**आशापाशक्लेशविनाशं विदधानां**
**पादाम्बोजध्यानपराणां पुरुषाणाम् ।**
**ईशामीशार्धाङ्गहरां तामभिरामां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ २ ॥**

**ஆஶாபாஶக்லேஶவிநாஶம் வித³தா⁴நாம்**
**பாதா³ம்போ³ஜத்⁴யானபராணாம் புருஷாணாம் ।**
**ஈஶாமீஶார்தா⁴ங்க³ஹராம் தாமபி⁴ராமாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 2 ॥**

**(இதன் பொருள்)** தனது திருப்பாத கமலங்களைத் தியானஞ் செய்தலிலழுந் தியிருக்கும் அடியார்களுக்கு ஆசாபந்தத்தினால் வருந் துன்பங்களை அழிவு செய்பவ ளும், உலகநாயகியும், நாயகனுடலிற்பாதியைக் கவர்ந்து கொண்டவளும், மிக்க அழகு வாய்ந்தவளும், கமலம் போன்ற திருக்கண்களை யுடையவளும் ஆகிய கௌரி அம்மையை யான் ஏத்துகின்றேன். (என்றவாறு)

மெய்யுணர்வு பெற்றுப் புலன்களைத் துறந்து தவநெறியில் நின்றார்க்கும், உடம் போடு கூடிய வினைப்பயன்கள் நிற்பதால், பழைய பயிற்சி வயத்தால் அவர்க்கு ஒரோவழிப் புலன்களில் நினைவு சென்று மேலும் பிறவித் துன்பத்துக்குக் காரணமாகு மாதலின், மெய்ப்பொருளாகிய தன்னை உணர்ந்து தனது தியானத்தில் இடைவிடாது பற்றுவைத்த அன்பர்களுக்கு, அவ்வித அவாவினால் வருந் துன்பங்களை அருட்சத்தி யாகிய அம்மை நீக்கியருள்வாள் என்பதாம்.

அவாவே பிறவித்துன்பத்திற்குக் காரணம் என்பதனை,

*“அவாவென்ப தெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்*
*தவாஅப் பிறிப்பீனும் வித்து”* (குறள், 361)

என்பதனுலும் அறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

2. *பாதமலர் மனத்திருத்திப் பரவுதியா னத்தகலாப் பண்பி னேர்க்கு*
*வாதனைசெ யவாத்தளையின் வருதுயர மாய்த்தருள் வாளுலகம் யாவும்*
*ஏதமற ஆளிறைவி யிறைவனுடற் பாதிகொண்டாள் எழிலான் மிக்காள்*
*காதமரும் விழிகமல மானுமம்மை கௌரியையான் இறைஞ்சுகேனே.*

**नानाकारैः शक्तिकदम्बैर्भुवनानि**
**व्याप्य स्वैरं क्रीडति येयं स्वयमेका ।**
**कल्याणीं तां कल्पलतामानतिभाजां**
**गौरीमम्बामम्बुरुहाक्षी महमीडे ॥ ३ ॥**

**நானுகாரைः ஶக்திகத³ம்பை³ர்பு⁴வனுனி**
**வ்யாப்ய ஸ்வைரம் க்ரீட³தி யேயம் ஸ்வயமேகா ।**
**கல்யாணீம் தாம் கல்பலதாமானதிபா⁴ஜாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 3 ॥**

**(இதன் பொருள்)** நாநாவிதமாகிய சக்திகளின் கூட்டத்தினுல் உலகமெவற்றி லுங் கலந்து வியாபித்து நிற்பினும் தானே ஏகமாய்ச் சுயமே விளையாடா நிற்பவ ளும், மங்கள வடிவானவளும், வணங்கும் அடியார்க்கு (வேண்டிய செல்வங்களை யெல்லாம் வழங்கும்) கற்பகக்கொடி போன்றவளும், கமலம் போன்ற திருக்கண்களை யுடையவளுமாகிய கௌரி அம்மையைப் போற்றுகின்றேன். (என்றவாறு)

மாயாகாரியப்படுத்தி உலகத்தை நடத்துஞ் சிவசத்தியாகிய பராசத்தி காரிய வேறுபாட்டாற் பலப்பல சத்தி பேதங்களாகி விரிந்து பிரபஞ்ச கிருத்தியத்தை நடாத் தும் எனினும், தான் அவற்றின் வேறுய் சர்வவியாபியாகிய சைதன்ய ரூபமாய் ஏகமாய் நிற்பள் என்றவாறும். அது அரசன் ஒருவனது ஆணையே அவன் கீழுமுள்ள அமைச்சர் முதலிய பலரிடத்திலும் நின்று பலப்பல வேறு பாடாகிய பல தொழில் களை யாற்றுதல் போல என்க. இதனை,

*“சத்திதான் பலவோ வென்னிற் றனெென்றே யநேகமாக*
*வைத்திடுங் காரியத்தான் மந்திரி யாதிக் கெல்லாம்*
*உய்த்திடு மொருவன் சத்தி போலர னுடைய தாகிப்*
*புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவ னினைந்த வாறும்.”*

என்னும் சிவஞான சித்திச் செய்யுளானும் அறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

3. *பலவிதமாந் தனதுசத்தி கணஞ்செறித்தே பரந்தபுவ னங்க ளெல்லாங்*
*கலந்தனைத்து மாட்டுவித்துங் கலப்பின்றித் தானேயாய்க் கலித்து நிற்பாள்*
*நலமலியு மங்கலைதாள் வணங்குநர்க்கு நல்குகற்பக் கொடியே யாவாள்*
*இலகுவிழி கமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்சு கேனே.*

**मूलाधारादुत्थितवीथ्या विधिरन्धं**
**सौरं चान्द्रं व्याप्य विहारज्वलिताङ्गीम् ।**
**येयं सक्ष्मात्सूक्ष्मतनुस्तां सुखरूपां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ४ ॥**

**மூலாதா$^{4}$ராது$^{3}$த்தி$^{2}$தவீத்$^{2}$யா விதி$^{4}$ரந்த$^{4}$ம்**
**ஸௌரம் சாந்த்$^{3}$ரம் வ்யாப்ய விஹாரஜ்வலிதாங்கீ$^{3}$ம் ।**
**யேயம் ஸக்ஷ்மாத்ஸூக்ஷ்மதனுஸ்தாம் ஸுக$^{2}$ரூபாம்**
**கௌ$^{3}$ரீமம்பா$^{3}$மம்பு$^{3}$ருஹாக்ஷீமஹமீடே$^{3}$ ॥ 4 ॥**

**(இதன் பொருள்)** மூலாதாரத்தினின்றும் எழுகின்ற சுழுமுனை வழியாய் சூரியமண்டலம் சந்திரமண்டலம் பிரமரந்திரம் என்பவற்றில் வியாபித்து விளையாடு கின்ற சோதி வடிவினளும், நுண்மையினும் நுண்மையாகிய திருமேனியுடையவ ளும், சுகரூபமானவளும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளுமாகிய கௌரி அம்மையைப் போற்றுகின்றேன். (என்றவாறு)

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஜ்ஞை என உடம்பில் ஆறு ஆதாரங்களுண்டு. இவற்றிற்கு இடம், முறையே, குதம், குய்யம், நாபி, இதயம், கண்டம், புருவமத்தி என்பன. மேலும் இவை முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், மனம் என்னும் தத்துவங்களைச் சார்வன. மூலாதாரமும் சுவாதிட்டானமும் அக்கினி மண்டல மெனப்படும்; மணிபூரகம் அநாகதம் இரண்டும் சூரியமண்டலம் எனப்படும். விசுத்தி ஆஜ்ஞை இரண்டும் சந்திர மண்டலம் எனப்படும். பிரமரந்திரம் விந்துஸ்தானம் எனப்படும். இதுவே சுத்தமாயை, குடிலை, குண்டலி எனவும்படும்.

சத்தியானவள் மூலாதாரத்திலிருந்து சுழுமுனை வழியாக மேலெழுந்து சூரியமண்டலத்தை கடந்து சதாசிவதத்துவத்திற்குமேல் சகஸ்ர கமலத்தி லிருக்கிற சந்திர மண்டலத்தில் அமிர்தமயமான வயிந்தவ ஸ்தானத்தில் பரமசிவத்தோடு கலந்து விளையாடுபவளாய்ப் பிரகாசிக்கிறுள் என்பதறிக.

இது குண்டலிசத்தி தானிருக்குந் தானம் விட்டுச் சென்று சிவசக்தி ஐக்கியமா மாறு கூறியதாம். இதனை அநுபூதியிற் கண்டு அறிவதே வீடுபேறென்ப.

இதனை,

*"மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு*
*முதுகளம்விற் புருவநடு மொழிவ தாறு*
*ஞாலமுமென் புனலுமனற் பிழம்புங் காலு*
*நாதமுறு பெருவெளியு மனமு மாக*
*மேலணுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பான்*
*மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்*
*தாலவிடம் பருகியதன் மகிழ்ச் ரோடும்*
*ஆனந்த முறும்பொருளை யறிய லாமே."*

(சௌந்தரிய லகரி)

எனவும்,

*"ஆறு தாரத் தங்குச நிலையும்*
*பேரா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே*
*இடைபிங் கலையி னெழுத்தறி வித்துக்*
*கடையிற் சுழுமுனைக் கபாடமுங் காட்டி*
*மூன்றுமண் டபத்தின் முட்டிய தூணின்*
*நான்றெழு மார்பின் நாவி லுணர்த்திக்*
*குண்டலி யதனிற் கூடிய அசபை*
*விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து*
*மூலா தாரத்து மூண்டெழு கனலைக்*
*காலா தாரத்து மூண்டெழு கனலைக்*
*அமுத நிலையும் ஆதித்த னியக்கமும்*
*குமுத சகாயன் குணத்தையுங் கூறி*

.................................................................................................

.................................................................................................

*கருத்தினிற் கபால வாயிலுங் காட்டி*
*இருத்தி முத்தி இனிதெனக் கருளி*
*என்னை யறிவித் தெனக்கருள் செய்து."*

(ஔவையார் - விநாயகரகவல்)

எனவும் வருவன வற்றுலறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

4. *மூலமதி லெழுஞ்சுழினை வழியாக முனநடந்து தபனற் றுண்டிச*
*சாலுமதி பதமேவி யமுதநிலை சார்ந்தாடல் புரியுந் தேவி*
*சாலவதி சூக்குமத்திற் சூக்குமமாந் தனுவடையான் சுகஞ்செய்கிற்பான்*
*ஏலுமரி விழிகமல மானுமம்மை கௌரியையா னிறைஞ்சு கேனே.*

**यस्यामोतं प्रोतमशेषं मणिमाला**
**सूत्रे यद्वत्कापि चरं चाप्यचरं च ।**
**तामध्यात्मज्ञानपदव्या गमनीयां**
**गौरीमम्बा मम्बुरुहाक्षीमहमीडे ॥ ५ ॥**

**யஸ்யாமோதம் ப்ரோதமஶேஷம் மணிமாலா**
**ஸூத்ரே யத்³வத்காபி சரம் சாப்யசரம் ச ।**
**தாமத்⁴யாத்மஜ்ஞானபத³வ்யா க³மனீயாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 5 ॥**

**(இதன் பொருள்)** சரம் அசரமாகிய சகம் முழுதும் தன்னிடத்தில் மணிவடத்தில் (கோத்த) மணிகள் போல அந்தர்வியாப்பியமாய் விளங்கியிருக்கப் பெற்றவளும், (தன்னை யறிதலாகிய) ஆத்மஞான, மார்க்கத்தால் அடையத்தக்கவளும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளுமாகிய கௌரி அம்மையை யான் போற்றுகின்றேன். (என்றவாறு)

இறைவனால் வியாபிக்கப்பட்டதாகலில் உலகம் ஓதப்ரோதம் எனப்படும். ஓதப்ரோதம் என்பது குறுக்கும் நெடுக்குமாகப் பரந்தது. அதாவது எப்பக்கத்திலும் பரந்துள்ளது; ஆடையில் பாவும் உண்டையுமாய் நூல் பரந்திருப்பது போல. சகம் முழுதிலும் இறைவன் உள்ளும் புறம்புமாய்க்கலந்து அந்தர்யாமியாய் வியாபித்தலின், சகம் இறைவனது வியாப்பியம் என்பது. அதனால் அஃது ஒதப்ரோதம் எனப்பட்டது. ஈசுரசத்தி சகத்துள் கலந்து நின்று காரியப்படுத்தும் என்பதனை,

*"உலகெலா மாகிவேறு யுடனுமா யொளியா யோங்கி*
*அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்*
*தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே*
*நிலவிசீ ரமல னாகி நின்றன னீங்கா தென்றும்"*

(சிவ - சித்தயார்)

எனவும்,

*"இருநிலனாய்த் தீயாகி விசும்புமாகி இயமான னாயெறியுங் காற்றுமாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்*
*பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறருருவுந் தம்முருவுந்*
*தாமே யாகி*
*நெருநலையா யின்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே"*

*"நிற்பனவு நடப்பனவு நிலனு நீரு நெருப்பினொடு காற்றாகி நெடுவானாகி*
*அற்பமொடு பெருமையுமா யருமை யாகி யன்புடையார்க் கெளிமை யதா*
*யளக்க லாகாத்*
*தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானு மியானு மாகிநின்ற தன்மையனை*

*நன்மை யோடும்*
*பொற்புடைய பேசக்கடவோம் பேயர் பேசுவன பேசுதுமோ*
*பிழை யற் றோமே.*"
(திருநா-தேவா-தாண்ட)

எனவும்,

"*வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி*
*ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்*
*கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு*
*வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே*"
(திருவாசகம்)

எனவும்,

"*ஒன்று நீ யல்லை யன்றியொன் றில்லை*
*யாருனை யறியகிற் பாரே*"
(திருவாசகம்)

எனவும்,

"*பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற*
*பரிபூர ணானந்தமே*" (தாயுமானவர்)

எனவும் வருவன வற்றாலறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

5. *சரவசர வுலகனைத்துங் கலந்துவியா பகமாகித் தன்னில் யாவுஞ்*
*சரமருவு ணியினிரை யெனவிளங்கத் தானகத்துச் சார்வாய் நிற்பான்*
*வரமருவு பாத்தியல்தேர் ஆன்மஞான மார்க்கமதா லடையத் தக்காள்*
*இருவரிய விழிகமல மானுமம்மை கௌரியையா னிறைஞ்சு கேனே.*

**प्रत्याहारध्यान समाधिस्थितिभाजां**
**नित्यं चित्ते निर्वृतिकाष्ठां कलयन्तीम् ।**
**सत्यज्ञानानन्दमयीं तां तनुरूपां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ६ ॥**

**ப்ரத்யாஹாரத்⁴யான ஸமாதி⁴ஸ்தி²திபா⁴ஜாம்**
**நித்யம் சித்தே நிர்வ்ருதிகாஷ்டா²ம் கலயந்தீம் ।**
**ஸத்யஜ்ஞானந்த³மயீம் தாம் தனுரூபாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 6 ॥**

**(இதன் பொருள்)** இந்திரியங்களைப் புலன்வழிச் செல்லவிடாது அடக்கி மனத்தை ஒரிடத்தில் நிறுத்திச் சமாதிநிலையில் இருக்கும் யோகியர்களுக்கு நித்தமும் அவர்மனத்தில் சுகோதயத்தை (சுகநிலையை) உண்டு பண்ணுபவளும், சச்சிதானந்த ரூபமானவளும், சிறிய இடையினளும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளும் ஆகிய கௌரி அம்மையை யான் ஏத்துகின்றேன். (என்றவாறு)

**निर्वृति** **நிர்வ்ருதி** என்பது சுகம், **काष्ठा** **காஷ்டா**[2] என்பது நிலை.

புலன்களை யடக்கி மனத்தை யொருவழிப்படுத்திப் பரப்பொருளில் நாட்டிச் சிந்தனை யற்றிருத்தலே **சும்மா** இருத்தல் என்பது. அதுவே சுகநிலை என்பது; இதனை,

*“சும்மா இருக்கச் சுகஞ் சுகமென்று சுருதியெல்லாம்”*

என்றற் றெடக்கத்துப் பட்டினத்தடிகள் வாக்காலும்,

*“சும்மா இரு சொல்லற என்றலுமே*
*அம்மா பொருளொன்று மறிந்திலனே”*

என்றும்,

*“ஆசா நிகளந் துகளா யினபின்*
*பேசா அனுபூ திபிறந் ததுவே”*

என்றும்,

*“விரும்புங் குமரனை மெய்யன்பி னுன்மெல்ல மெல்லவுள்ள*
*அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே*
*கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே”*

என்றும்,

*“பாதார விந்த மரணுக அல்லும் பகலுமில்லாச்*
*சூதான தற்ற வெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்*
*போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே”*

என்றும்,

*“இராப்பக லற்ற இடத்தே யிருக்கை யெளிதல்லவே”*

என்றும் வரும் அருணகிரிநாதர் திருவாக்கானும்,

*"உணர்ந்தார்க் கென்றுந் - தேனவன்காண்"*

என்றும்,

*"கருதுவாரிதய கமலத்தூறந் - தேனவன்கான்"*

என்றும் வரும் அப்பர் சுவாமிகள் திருவாக்கானுமறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

6. *புலங்கழிந்து பொறியடங்கப் பொருளொன்றின் மனமிருத்திச் சமாதி புக்கோர்*
*துலங்ககத்திற் சின்மயமாஞ் சுகோதயஞ்சேர் வித்தருளந் தூயை யென்றும்*
*மலங்கதுவாச் சத்தொடுசித் தானந்த மயவடிவி சிறுநு சுப்பாள்*
*இலங்குவிழி கமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்கேனே.*

**चन्द्रा पीडा नन्दितमन्दस्मितवक्त्रां**
**चन्द्रापीडालंकृतनीलालकभाराम् ।**
**इन्द्रोपेन्द्राद्यर्चितपादाम्बुजयुग्मां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ७ ॥**

**சந்த்³ரா பீடா³ நந்தி³தமந்த³ஸ்மிதவக்த்ராம்**
**சந்த்³ராபீடா³லங்க்ருதநீலாலகபா⁴ராம் ।**
**இந்த்³ரோபேந்த்³ராத்³யசிந்தபாதா³ம்பு³ஜயுக்³மாம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 7 ॥**

**(இதன் பொருள்)** சந்திர சேகரராகிய பரமசிவன் கண்டு களிப்படைவதாகிய புன்னகை பூத்த முகத்தினளும், பிறை யணியிஞல் அலங்கரிக்கப்பட்ட நீலநிறம் பொருந்திய அளக பாரத்தை யுடையவளும், இந்திரன் உபேந்திரன் (விஷ்ணு) முதலிய தேவர்களால் அருச்சிக்கப்பட்ட இரண்டு திருப்பாத கமலங்களையுடைய வளும் கமலம் போன்ற திருக்கண்களை யுடையவளும் ஆகிய கௌரி அம்மையை யான் ஏத்துகின்றேன். (என்றவாறு)

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

7. *நிலவுமிழு மதிமுடித்தோ னேயமுற முகிழ்த்தகுறு நகைமு கத்தாள்*
*நிலவுபிறை முடியணியா நிமிரளக பாரநிரை பரிக்குந் தேவி*
*வலவயிரி முரவயிரி யாதியர்கள் வழுத்துமிணை மலர்ப்ப தத்தாள்*
*இலகுவிழிகமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்சுகேனே.*

**आदिक्षान्तामक्षरमूर्त्या विलसन्तीं**
**भूते भूते भूतकदम्बसवित्रीम् ।**
**शब्दब्रह्मानन्दमयीं तां तटिदाभां**
**गौरीमम्बाम्बुरुहाक्षीमहमीडे ॥ ८ ॥**

**ஆதி³க்ஷாந்தாமக்ஷரமூர்த்யா விலஸந்தீம்**
**பூ⁴தே பூ⁴தே பூ⁴தகத³ம்ப³ஸவித்ரீம் ।**
**ஶப்³த³ப்³ரஹ்மானந்த³மயீம் தாம் தடிதா³பா⁴ம்**
**கௌ³ரீமம்பா³ம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 8 ॥**

**(இதன் பொருள்)** அகரமுதல் க்ஷகர மீறுகிய 51 அக்ஷா ரூபமானவளும், என்றும் அழிவற்ற திருமேனி கொண்டு விளங்குபவளும், பஞ்சபூத புவனங்கடோறும் உயிர்க்கூட்டங்களைப் பிறப்பிப்பவளும், சத்தப் பிரமமாகிய ஆனந்த வடிவினளும், மின்னெளி போன்ற காந்தியுடையவளும், கமலம் போன்ற திருக்கண்களை யுடைய வளும் ஆகிய கௌரி அம்மையை யான் ஏத்துகின்றேன். (என்றவாறு)

வடமொழியில் உயிர் 16-உம் மெய் 35-உம் ஆக 51 அக்ஷரங்கள் உண்டு. முதல் எழுத்து அ என்பது, ஈற்றில் உள்ளது க்ஷ என்பது. பராசத்தி இவ்வைம்பத்தோரக்ஷர வடிவமானவள் என்றபடி,

"*அகரம தாதியான வெழுத்தெலா மாகி*"
எனக் கந்தபுராணத்தில் வருவதும் நோக்குக. பராசத்தி நாதரூபமாய்ச் சத்தப் பிரபஞ்சத்திற்கு இறைவியாவள் என்றறிக.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

8. *சொலுமகரம் க்ஷகரமுதல் முடிவெழுத்தா யழிவிலதாய்த் துலங்கு மெய்யாள்*
*நிலமுதலாம் பூதபுவ னத்துநாநா வுயிர்க்கூட்ட நிகழத் தந்தாள்*
*நிலவுமொலிப் பிரமமதா மானந்த மயிமின்னை நிகர்தே சுற்றுள்*
*இலகுவிழிகமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்சுகேனே.*

**यस्याः कुक्षौ लीनमखण्डं जगदण्डं**
**भूयो भूयः प्रादुरभूदुत्थितमेव ।**
**पत्या सार्धं तां रजताद्रौ विहरन्तीं**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ९ ॥**

**யஸ்யா꞉ குக்ஷௌ லீனமக²ண்ட³ம் ஜக³த³ண்ட³ம்**
**பூ⁴யோ பூ⁴ய꞉ ப்ராது³ரபூ⁴து³த்தி²தமேவ ।**
**பத்யா ஸார்த⁴ம் தாம் ரஜதாத்³ரீ விஹரந்தீம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 9 ॥**

**(இதன் பொருள்)** எவளுடைய வயிற்றுள் அகில உலக அண்டங்களும் அடங்கி யிருந்து மீண்டும் மீண்டுந் தோன்றி எழுகின்றனவோ அத்தகையினளும், பதியாகிய பரமசிவனோடு வெள்ளியங்கைலை மலையில் விளையாடுபவளும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளுமாகிய கௌரி அம்மையை யான் போற்றுகின் றேன். (என்றவாறு)

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

9. *அலகிலுல கண்டமவை யனைத்துமெவள் வயிற்றடங்கி மேலு மேலும்*
*விலகலின்றி வெளிவந்து விரிந்திடுமத் தகையவருள் மேவு மன்னை*
*குலவுபெரு நேயமுறு கொழுநனுடன் வெள்ளிமலை குலாவுந் தேவி*
*இலகுவிழி கமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்சுகேனே.*

## नित्यः शुद्धो निष्कल एको जगदीशः
## साक्षी यस्याः सर्गविधौ संहरणे च ।
## विश्वत्राणक्रीडनलोलां शिवपत्नीं
## गौरीमम्बामम्बुरुहाक्षी महमीडे ॥ १० ॥

**நித்ய: ஶுத்³தோ⁴ நிஷ்கல ஏகோ ஜக³தீ³ஶ:**
**ஸாக்ஷீ யஸ்யா: ஸர்க³விதௌ⁴ ஸம்ஹரணே ச ।**
**விஶ்வத்ராணக்ரீட³னலோலாம் ஶிவபத்னீம்**
**கௌ³ரீமம்பா³மம்பு³ருஹாக்ஷீமஹமீடே³ ॥ 10 ॥**

**(இதன் பொருள்)** நித்தியனும் நின்மலனும் நிட்களனும் ஏகனுமாகிய உலக முதல்வன் (சிவம்) சாட்சியாயிருப்பத் தானே படைத்தல் அழித்தல்களைச் செய்பவ ளும், உலகத்தைக் காத்தலாகிய விளையாட்டில் பெருவிருப்புடையவளும், சிவபத்நி யும், கமலம் போன்ற திருக்கண்களையுடையவளுமாகிய கௌரி அம்மையை யான் போற்றுகின்றேன். (என்றவாறு)

இறைவன் இயல்பாகவே பாசத்தடை யில்லாதவன், உற்பத்தி நாசம் இன்றி என்றும் உள்ளவன், குணங்குறி இல்லாதவன், தனக்கொரு முதலின்றித் தானே முதல்வனாயிருப்பவன், உலகெலா முணர்ந்து ஓதற்கு அரியவன், அலகில் சோதிய னாகி விளங்குபவன். இவ்வாறு அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் ஒன்றினுந் தோய்வின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மை நிலையில் சிவம் எனப்படுவன். இதுவே,

*“அறிவுக்கறிவாகி அவ்வறிவுக்கெட்டா நெறியிற் செறிந்த நிலை”*

என்பது. இதனை,

*"ஊரிலான் குணங்குறியிலான் செயலிலான் உரைக்கும்*
*பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்*
*சார்வி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு*
*நேரிலா னுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்"* (கந்த-புரா)

என்றும்,

*"நாதமு நாதாந்த முடிவு நவைதீர்ந்த*
*போதமுங் காணாத போதமாய் - ஆதிநடு*
*அந்தங் நடந்த நித்தி யானந்த போதமாய்ப்*
*பந்தந் தணந்த பரஞ்சுடராய் - வந்த*
*குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்குஞ்*
*செறியும் பரம சிவமாய் - அறிவுக்*
*கநாதியாய் ஐந்தொழிற்கு மப்புறமா யன்றே*
*மநாதிகளுக் கெட்டா வடிவாய்த் - தனாதருளின்*
*பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்குந்*
*தஞ்சமென நிற்குந் தனிப்பொருளாய் - எஞ்சாத*
*பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும் ணர்வுங்*
*காரணமு மில்லாக் கதியாகி"* (கந்தர் - கலிவெ.)

என்றும் வருஞ் சைவப்பெரியோர் வாக்கானும் அறியலாம். இப்படிச் சுத்தசிவமாக நிற்கும் இறைவன் உயிர்களிடத்துக் கொண்ட தன்னின் வேறாகாத கருணை திருவுரு வாக, உலகெலா மாகியும் உலகைத் தொழிற்படுத்தியும் உயிர்களின் வழி நிற்குந் தன்மையில், **சத்தி** எனப்படுவன். இறைவன் தன் ஆணையாகிய சக்தியால் உலகை ஐந்தொழிற்படுத்தி நிற்கு நிலையில் பசுபதி எனப்படுவன். இங்ஙனம் தன்னின் வேறாகாத தன்னருட் சத்தியாகிய பராசத்தியானவள் உலக கிருத்தியங்களை நடத்தத் தான் அவற்றில் சார்ந்துஞ் சாராமலும் ஸாக்ஷிமாத்திரையாய் நிற்பன் என்பதை,

*"உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி*
*அலகிலா உயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்*
*தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே*
*நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்"*

எனவும்,

*"சத்தியுஞ் சிவமு மாய தன்மையில் வுலக மெல்லாம்*
*ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியுமாகி*
*வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை எல்லாம்*
*இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்"*

எனவும்,

*"அருளது சத்தி யாகும் அரன்றனக் கருணை யின்றித்*
*தெருள்சிவம் இல்லை அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை*
*மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்(கு)*
*இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்"*

(சிவ - சித்தி.)

எனவும்,

*"நீடு* **பரா சத்தி***நிகழ் இச்சா ஞான*
*நிறைகிரியை தாவதனை நிமலன் மேவி*
*நாடரிய கருணைதிரு உருவ மாகி*
*நலின்றுபல கலைநாத விந்து வாதி*
*கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்*
*கொடுவினைகொள் தனுகரண புவன போகம்*
*பீடுபெற நிறுவியவை யொடுக்கு மேனி*
*பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே"* (சிவப்பிரகாசம்)

எனவும் வரும் சைவசித்தாந்த சாத்திரச் செய்யுட்களானும் அறியலாம்.

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

10. *மலரகிதன் நித்தியன்நிட் களனேக ளுருமிறை வயங்கச் சான்றுய்ப்*
*பலவுலகும் படைத்தருளித் துடைத்திடுமப் பரந்தானே பரிக்கும் சத்தி*
*நலமுலவச் சகம்பரிபா லிக்குமாடல் நயப்புமிக்கா ளரன்றன் பன்னி*
*இலகுவிழி கமலமலர் மானுமம்மை கௌரியையா னிறைஞ்சுகேனே.*

**प्रातः काले भावविशुद्धः प्रणिधानात्**
**भक्त्या नित्यं जल्पति गौरीदशकं यः ।**
**वाचां सिद्धिं संपदमग्र्यां शिवभक्तिं**
**तस्यावश्यं पर्वतपुत्री विदधाति ॥ ११ ॥**

**ப்ராத: காலே பா⁴வவிஶுத்³த⁴: ப்ரணிதா⁴னாத்**
**ப⁴க்த்யா நித்யம் ஜல்பதி கௌ³ரீத³ஶகம் ய: ।**
**வாசாம் ஸித்³தி⁴ம் ஸம்பத³மக்³ர்யாம் ஶிவப⁴க்திம்**
**தஸ்யாவஶ்யம் பர்வதபுத்ரீ வித³தா⁴தி ॥ 11 ॥**

**(இதன் பொருள்)** வைகறையில் சித்த சுத்தியோடு எவர் பத்தியாய் இக்கௌரீ தசகத்தை ஓதுகின்றரோ அவருக்கு வாக்குச் சித்தியையும் மேலாகிய செல்வத்தையும் சிவபத்தியையும் பார்வதி அம்மை தவறுது அருளுவாள். (என்றவாறு)

## நூற் பயன்

**வேறு.**

**(தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள்)**

11. *நித்தமுங் காலைப் போதில் நேயமாய் நெஞ்சுஞ் சித்த*
*சுத்தியுங் கொண்டு கௌரிப் பத்திது சொல்வோர் வாக்குச்*
*சித்தியும் மேலாஞ் செல்வ வாழ்க்கையுஞ் சிவத்தி லாழ்ந்த*
*பத்தியும் பெறுவர் அன்னை பார்வதி யருளான் மாதோ.*

# கௌ³ரீ த³ஶகம்

என்னும்

# கௌ³ரீப் பத்து

**முற்றிற்று.**

**தேவி துணை.**